# கவிதீர்த்தச்சருக்கம்.

---

அந்தண்மாதவிர்கேண்மினென்றுயர்சூதன்மீளவுமருள்செய்வான்
கந்தமாதனவெற்பினிற்றிகழ்கவிகள்கூடுபுகாதலாற்
றந்தவோர்தடமுண்டதன்பெயர்சாற்றுவார்கவிதீர்த்தமென்
றுந்துபாரினுயிர்க்கெலாமுபகாரமாயஃதோங்குமால். (க)

நீடிலங்கைமனுதியாயநிசாசரக்குலமிற்றபின்
கோடரங்கொள்பெரும்பதாகினிகண்டதீதலைவருமேவினோ
டாடியஞ்சதிலேறிநின்றுபினன்பினுவிதலாடினோர்
நாடருங்கதிசேர்வனாவகைவினையுமாநிலைநாசமாம். (உ)

அவர்க்குநல்சுரவில்லைமற்றவர்பீடையென்பதுமறிகிலார்
பவர்க்கமேவிலர்படிசுரற்கிதுபடர்வமென்றெழுபண்பினோர்
சுவர்க்கமெய்துவொன்றுமொத்திடுநீணயிதற்கிலையாமெனாக்
கவர்க்கண்வைகிடும்வானரங்கள்வரங்கொடுத்தனகருதியே. (ங)

அன்னிரந்தவினங்களங்கணடைந்திராமனையண்ணலை
நின்னிரந்தனநீயிதற்கொருநீள்வரந்தருகென்றலும்
பொன்னிரந்தரம்வைகுமார்பிறைபுரிவுகொண்டுளநன்றுநீர்
சொன்னிரந்தவரம்வழங்குவலென்றுநண்பொடுசொல்லுவான். (ச)

கங்கைநீர்பிரயாகையாதியகாசினிப்புனலேய்பல
மங்கமாமறைசான்குமோதிடுமப்பலம்பலரடிதொழு
மங்கைபங்கனைமாலைவேதனைவழிபடும்பலமகமெலாம்
பொங்குநூன்முறைசெய்திடும்பலமனுவெலாம்புகலும்பலம். (ரு)

அடையவிப்புனல்குடையுமாண்புடையாதரத்தினரவரொலா
முடையராகுகவென்றனன்றிரளுகம்யாவுமுவப்பவே
புடையமர்ந்திடுபோதனுதபனிந்துவானிறைபொறியமற்
கடவுளந்தகனிருதிநீர்முதல்காலியக்கர்கள்காவலன். (சு)

விசுவதேவர்வசுக்கள்சாத்தியராதிவிண்ணவர்குற்சகன்
வசையிலத்திரிபிருகுகோதமன்மலயமாமுனிகண்ணுவ
னசைவில்கோசிகனொடுசுதீக்கிணனருள்பராசரன்சனகனல்
லிசைபயின்றிடுநாரதன்முதல்யோகமாதவரிவரொலாம். (எ)

வென்றமையவிராகவன்றருமெய்வரத்தைவழுத்தியே
யன்றுதாமதின்மூழ்கியேகவிதீர்த்தமென்றிஃதவனிமே
னின்றுநீடுகவென்றுரைத்தனர்நிலவுமாதவமுனிவர்கா
ளொன்றுமேவிடவுரியர்தாங்கவியுதகமூழ்குவருண்மையால். (அ)

பச்சிலைப்பொழிலன்னகூந்தலரம்பையென்பவள்பவளவாய்
மிச்சிலைப்பெறில்வானநாடர்களமுதுவர்த்தெனுமேன்மையாண்
மைச்சிலைப்புதலாள்படிந்ததில்வந்துகோசிகன்வாய்மையா
லச்சிலைத்தனுவானகுற்றமகற்றியுற்றனளமரரூர். (கூ)

ஆதலாலிதன்மேன்மையான்சொலவல்லனல்லனெனுவருட்
சூதனேறுதினன்மாதவத்தவர்சொல்லுவாரெதிர்கலலதா
மாதுதானகவிதீர்த்தமெப்படிவந்ததுமூழகினள்கோசிகன்
யாதுகணடசபித்தனன்புகலிகைவிரித்தினிதென்றனர். (௧0)

வேறு.

முத்தமுற்புரிவார்க்கதுமொழிகுவான்சூதன்
குத்திருபபுணர்குசிகாதம் தலத்தினில்விசுவா
மித்திரபபெயர்வேந்தனுண்டாயினனமேனு
ளொத்தவித்தகர்பிறரிலான்வலியினுலுயர்ந்தோன. (௧௧)

அனையனுகிய கவுசிகனலகிரிதானை
தனைமருங்குறச்சூழ்நதிடத்தாைமடக்கோதை
புனையுநலவளநதெரிகுவானதிரிதருமபொழுதில
வனைபுமேர்வடமீனமணமகனுமைழவநதான. (௧௨)

கண்டருநதிகாதலனகவுசிகவேந்தற
குணடிகூறினனரசனுமிசைநதவனுபய
முண்டகங்கணமுன்பணிநதெழீஇமேவினுன்முனிவீ
ரண்டமீன்றவனபிறங்கடையாசசிரமத்தில். (௧௩)

ஆமவ்வேலையில்விசிட்டனுமருநதவவசிட்ட
னுமமாமுனியறுசுவையுணடிநால்வகையாற
கோமகனறனையருததினனவிருநதெதிர்கொணடு
காமதேனுவையுடையனுமபெருநதிருக்களிபபால். (௧௪)

அருநதுகோசிகனபரிசிலர்குறையிலாதளியிற
பொருநதுதனகுறைசிறிதிலாவளங்கெழுமபுலவர்
திருநதுதேனுவைக்கவருவானசிநதையிலவிருபபுற
றிருநதவன்முனஞ்சென்றெனக்கிதனையீகென்றுன. (௧௫)

வார்த்தைகேட்டதவமுங்கலான்மறுத்தனன்வசிட்டன்
கூாத்தவாட்படைக்கோசிகனமாசிலாகிகொடையாற
சேர்த்ததேனுவைபபறறுபுதிண்புயவலியா
லீர்த்தனன்கொணாநதேகுவானதன்வலியெண்ணுன். (௧௬)

ஆனபோதவானளப்பிலாமிலேச்சரையளித்துக்
கோனெடும்படைதொலைநதிடத்தொலைத்ததுகுசிகா
மானகோத்திரம்வநதவன்மனத்திடைமயங்கிப்
பானிறக்கொடிவிடையனையவண்வழிபட்டான. (௧௭)

வரமனங்கொளாவழிபடுமன்னவன்முன்னஞ்
சிரமலங்கலாஞ்சிவபிரான்செழுந்தனுப்பிறகங்
கரமிலங்கிடக்காட்சிதந்தருளினன்கமலப்
பிரமவாளிமுன்படையெலாமரசனும்பெற்றே. (௧௮)

கொண்டவெஞ்சினந்திருகுபுகோசிகன்குறுகிப்
பண்டைநான்முகன்மகன்மிசைப்படையெலாம்விடுத்தா
னெண்டருந்தவவசிட்டனுங்கேந்துமோர்பிரம
தண்டமற்றவன்முன்னிறீஇயவையெலாந்தடுத்தான். (௧௯)

வாசவனேறதும்வாய்மைவிளுவிப், பேசிடுகின்றுள்பேதையரம்பை
கோசிகனுற்றுங்கோதிறவத்தை, நீசிதையென்றனீதியதன்றே. (௩உ)

கோள்படுகாட்சிக்கோசிகனும்மென், வாள்படுகண்ணுள்மால்கொளுவாரே
தாள்படுமேனிச்சோதியைபெய்த, வேள்படுதீமைவிளைந்திடுமெற்கே. (௩௩)

வெஞ்சினவிசுவாமித்திரன்மேனிக், கஞ்சுவனம்மாவன்றிநின்னேவ
லெஞ்சலிலேதமிழைக்குவலென்று, வஞ்சிவணங்கிமறுத்துரைசெய்தாள். (௩௪)

காண்டவன்மாற்றங்கன்னிமறுத்தே, யாண்டுரைசெய்யவழைத்தருகாகப்,பூண்
டிகழ்கொங்கைபுலங்கொளுமாற்றுன், மீண்டுமுரைப்பான்விண்ணவர்கோமான்.()

அச்சுறுகில்லையரம்பைகருப்பின், மெய்ச்சிலைவேள்ளவேனிலினேடு
மைச்சிறைவாலவரிக்குயில்கூவ, விச்சையிழைப்பானேகுவனின்பின். (௩௬)

பொன்றுணையாகப்பொற்றுடியானு, நின்றுணையாவேனீநடவென்றுன்
மன்றுணையென்னமறுத்திடமாட்டா, ளன்றுணேவோடுமரம்பையிசைந்தாள். (௩௭)

கோற்றொடிசென்றுள்கோசிகன்முன்று, வேற்றமிருந்தன்னேரொழிலெல்லாந்
தோற்றுறநின்றுண்ணெனவங்கண், மாற்றிரிவானில்வழீஇவிழுமின்போல்.(௩௮)

மேவியதங்கண்மெல்லவசந்தங், கூவினதெங்குங்கோகிலம்வேளும்
பாவையரம்பைபடுஞ்செயறேரா, ஏவியலைந்துமெடுத்தயனின்றுன். (௩௯)

தோமறுநோன்புதொடங்கியுஞற்றுங், கோமுனியாகுங்கோசிகனங்கட்
டமெழுகிற்குழைவுற்றுயர்சிந்தை, காமுறுகின்றமைகண்ணிவிழித்தான். (௪0)

காணுபுநிற்குங்காதலரம்பை, மாணிழைதன்னைமருத்துவனிட்ட
கோணிலைதென்றுகுறித்துணர்வுற்றே, யூணறநோற்போனுள்ளம்வெகுண்டான்.()

மல்கியசீற்றமாதவனங்க, ணல்குலெனும்பையரம்பையைநாடி
வெல்குவனெங்ஙன்வெகுட்சியையென்று, வொல்குமருங்குலுழப்பணியானே.(௪உ

சேண்டனின்மாதேசேர்ந்திவண்வாளா, மூண்டெழுகோபமுதற்பொருளாறு
யாண்டொருபத்தாமாயிரமட்டு, நீண்டெழுகல்லாய்நிற்குதிநீயே. (௪௩)

தோகையிவ்வெல்லைதொலைந்தவதற்பி, ஞகமநான்மறையந்தணனுலே
வேகவழற்சிலைமேனிவிடுத்தே, யேகுதிவிண்ணினிலென்றுசபித்தான். (௪௪)

விஞ்சியவிசுவாமித்திரனுலே, யஞ்சொலரம்பையருஞ்சிலையாறு
டஞ்செனநீடுதவத்தவர்தம்பால், வஞ்சமிழைத்தெவர்வாழ்ந்தவர்மண்மேல். (௪௫)

வேறு.

மிகநெறிசேர்முனிவிசுவாமித்திரன்றன்சரபத்தா
லகநெடியகருந்தடங்கணரம்பையெனுமரமடந்தை
திகழுருவஞ்சிலையாகத்திறல்கெழுகோசிகர்பெருமான்
புகலுடசந்தனிலிருந்தாள்பொழுதிறுதிவருங்காறும். (௪௬)

தருமமயமாம்விசுவாமித்திரனுந்தவவேந்தும்
பொருவரியதவமுன்போற்புரிந்துபெரும்புகழுகிறீஇ
யருமறைதேர்வசிட்டமுனிமறைமுனியென்றறைந்திடலாற்
பிரமமுனியாயினன்றவத்தின்மிகப்பெரிதுளதோ. (௪௭)

ஆசிரமமதிலந்நாளருந்தமிழ்தேரகத்தியன்பா
லேசமிகுமாணவகனிறைதருமதியுடையான்
றேசமிகுஞ்சுவேதனெனுந்திருமுனிவன்சிவகதிவேட்
டீசனடிநினைந்துதவமெண்ணில்பகலிழைத்திருந்தான். (௪௮)

அவனுறையுமிடனுற்றாளரக்கியங்காரகையென்பா
ளுவரியெனக்குமுறியெழீஇயொழிக்குமலசலமவற்றாற்
சிவனருள்சேர்தவராசன்றிருமேனிமாசுபடத்
தவறிழைத்தாள்சுவேதனவன்றனதுதிருக்கண்சிவந்தான். (௪௯)

சீற்றமுறுஞ்சுவேதமுனிசினவரக்கியவடன்மேற்
காற்றினெங்கணையதனாற்கலானரம்பையரம்பையெனு
முற்றமிகுஞ்சிலையதனையுன்றுரந்தானவள்வெருவிக்
கூற்றுறையுந்திசைவேலைக்கோடிகுறித்தோடலுற்றாள். (௫௦)

கடிதுரப்பிநணிபாறுங்காரரக்கியவள்பின்ன
ரிடிதுரப்பதெனமுகிலேயெனவிளங்கதிர்மாந்தும்
பிடிதூரக்கும்புளினமின்றார்பெருங்கவண்வீசியசிலைபோ
னெடிதுதூரந்ததுகாமர்நிறையரம்பையெனுங்கல்லு. (௫௧)

பிற்றொடர்ந்துசிலைபடரப்பின்பார்த்துப்பெரிதோடும்
விற்றொடருநுதலரக்கிவீழ்ந்தனளக்கவிதடத்திற்
கற்றொடர்ந்துவிழுந்ததுடன்கடியமுடியுடைந்தரக்கி
யிற்றனண்மற்றவளுதிரமெழுந்துகரைபுரண்டோட. (௫௨)

பட்டமதிலமிழ்ந்ததவப்பயனதனாற்சிலையுருவம்
விட்டரம்பையமார்குழாம்விரைகமழ்பூமழைபொழியக்
கட்டெழிலையணியுமணிக்கலன்மறைப்பக்கத்தூரிப்
பொட்டமுகின்கண்ணேறுபுலவர்குழாங்கொளநீர்ப்ப. (௫௩)

வெள்ளிநெடுஞ்சங்கிலியால்வீக்குண்டவேழமெனத்
தெள்ளியநித்திலவலங்கற்றிரணிலத்துணைதயங்கக்
கள்ளவிழுமலர்க்கூந்தற்கணமுகட்டிருள்பாப்ப
வுள்ளமுதற்பொருளினைத்தழும்பர்குழாந்திறையளப்ப. (௫௪)

திருப்பதுமமலர்வாட்கட்செந்துவர்வாய்முகுளமுலை
யுருப்பசிமுன்னரமகளிரொருங்குநிரண்டுவந்தேத்தத்
தருப்பணையின்கடிப்பிணையாற்றபனியதுந்துபிமுழங்க
விருப்புறுசாமரைவீசவிமானமிசைவிளக்கென்ன. (௫௫)

கற்படிவப்பழிதீர்த்தகவிதீர்த்தந்தனைப்பழிச்சி
யெற்படிவச்சுடர்வேணியிராமேசன்றனையிறைஞ்சிப்
பொற்படிமேற்புகுந்தனண்முன்புத்தேளிர்குலப்பரத்தை
யுற்படிவத்தரக்கியங்காரகையென்னும்வடாளும். (௫௬)

மாதவன்பேர்கிருதாசிமலயமுனிசாபத்தாற்
றீதுபயிலிராக்கதியாய்த்திரிந்தலமந்தனள்சிலநாட்
பாதகந்தீர்கவிதீர்த்தம்படிவுறுமப்பாக்கியத்தான்
மீதலகந்தனையடைந்தாள்விண்ணவர்தங்கிளைதீர. (௫௭)

வேறு.

ஒருகிருதாசியரம்பையாகியவுவரிருவோர்களுமும்பருரினி
விருடிசுவேதனதன்பினான்முனமிடர்படுசாபமகன்றுமேவினர்
வருமுறையாலிரந்தவாவியின்மனனொடுமேனிவருந்தியாயினு
மருமுனிவீர்கள்விரும்பியாடுமினறநெறிநீடுநலங்கள்சேரவே. (௫௮)

கவிதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௩௭௨.

---

# காயத்திரிசரசுவதிதீர்த்தச்சருக்கம்.

---

நிரந்தநறும்புனற்பெருமைநிகழ்த்தியபின்சூதனருணையநதன்னால்
வரந்தருமாண்சவுனகனைமுதன்முனிவர்தமைநோக்கிவகுத்துரைப்பா
னுரந்தருநூலுடையீர்காளுயர்காயத்திரிவாணியுவாதம்பேராற
பரந்தநெடுநீர்த்தடமிரண்டுண்டவைபுனிதம்பண்ணுவிக்கும்படிகளெங்கும். (௧)

பகர்வரியவீடுதரும்படிப்பவர்கேட்பவர்பாவம்பாற்றுவிக்கு
மிகுதருமந்தருநரகில்வீழ்த்திடாவவையிற்றின்மேன்மையெல்லாம்
புகல்வனுமக்கனையவிருதடம்படியுமாநதரவர்போற்றுந்தாய
ரகலுதரத்தடம்படியாரடைவரபவர்க்கமிதற்கையமின்றால். (௨)

வந்ததெவன்பெயரிவைக்குவளர்காயத்திரிசரசுவதியென்றென்று
லந்தமுதலமர்கந்தமாதனத்திலயன்மடவாரமர்சலாலே
சந்தமறைமுறையுணர்ந்ததாபதர்காளென்றனனத்தவத்தின்மேலோ
ரிந்தவுரைதருசூதன்றனைமுகம்பார்த்தஃதறிவாரிசைக்கலுற்றார். (௩)

நோக்குநெடும்பாரவர்க்குநோன்றலைவான்றலையவர்க்குறுவறற்கெட்டா
நீக்கணிலைவிழியளவாவியன்கநதமாதனத்தின்வெறிவணடாடுந
தேக்கமலமனையிருப்போன்றிருமனையாதொருபொருட்டாற்சேர்நதாளொங்கள்
பாக்கியமாம்புகழ்ச்சூதபகொன்றாரன்னவனும்பகருகின்றான. (௪)

மால்வயிற்றில்வந்துலகநதந்தவன்றன்வயிற்றில்வரும்வாக்கெனும்பே
ரால்வயிற்றினவள்பணைத்தோளணையநினைந்தடங்கலின்றிபவடன்காமப்
பால்வயிற்றிற்புகநிறையபபருகிடுவான்பெருகுமயறபரவைமூழ்கி
வேல்வயிற்றிற்புகுந்ததுபோன்மிகத்தளர்ந்தான்முன்னரந்தவேலைதன்னில். (௫)

தனைத்தொடருந்தகையுணர்ந்துதகரநறுங்குழல்வாக்கின்றையனாணித்
துனைத்திளமென்பிணையானாளிரலையுருக்கொடுதுரந்தான்சுருதியானு
மினைத்தெனவோரளவைபெறுவியானைமுதலெறும்புகடையென்னாநின்ற
வனைத்துருவும்பிறர்க்காக்குமயன்றனக்கிவ்வுருக்கோடலரியதன்றே. (௬)

அவனிதருமயன்பயந்தமகட்புணரும்வேட்கையுறிலறமார்காப்பா
ரிவனிதனைச்செய்ததுநன்றென்றிமையோரிழிபுரைத்தாரினையகாலைச்
சிவனெயினர்வடிவுகொடுசென்றணுகிப்பினாகமெனுஞ்சிலைவணக்கிப்
பவனனுகர்பணிக்குலமுதாழ்காதளவும்பூட்டியொருபகழிவாங்கி. (௭)

உணருமிருங்கலைபலவுமுலகுதவும்பேரகட்டிலுதித்தமாலைப
புணருமொருகலையுருவாமபோதனுடலபுகததுரந்தானபுனிதனங்கட்
டுணரவிழ்தேங்கமலமகனறுணிந்துசிரந்தனைவீழ்ந்தானசோதியொண்ணுங்
கிணரொரிபோனறவனுடலிறபிறந்துவிண்போயமகயிரமாயிலங்கிறறமமா. (௮)

ஆதிநாளதுவாகியதனைவெரினறொடாந்தலகக்குறறியினறு
மாதிநாளீரவேணியனுமானறலைநாணமருங்குமபாவயங்குகினறுன
போதனுயிர்போனசுறபினபுருடனிழந்துளமபுழுங்கிப்புலமைமாதுந
திசிரிகாயததிரியுந்திரியுபடுகைணியராயததிரிதாகிறபார. (௯)

பொனமகளுமாயவனுமபுரந்தரனுமபுலோமசையுமபொருந்திவாழு
நனமைதெரிந்தகங்கலந்துநாணமுறறியுடலவெதுமபிநாளுநாளும
புனமைபுணாந்தயாந்திடுவாாபுண்டரிகமலாக்கோயிலபுரியுங்கொணக
ணினமைமெனுமபழிநீங்கிமீணடுதிகழுஞ்செபலசுறகாமெணணங்கொளவாா. (௧௦)

உலகமுழுவதுமபடைகக்தானமுகனையுளகாககருமொருமைமயோரா
யலகிறந்தசிவசலசதுமககதுவாயவிழைந்துளபேறள்பபதாகி
நிலவுகசமாதனத்தேரியமமுடனுமாபதிதாணினைந்தோறறுா
திலகநுதாபாரதியுந்திகழ்சாயத்திரியுமெனறுதிருவினமிககாா. (௧௧)

தங்களபெயாததட்டிரணடுகந்தவறறுணமுபபொழுதுந்தாங்கணமுழுகி
மங்கையாதாமுணுமறந்துமனங்கொளசினங்காமமயனமருவாராகிச
சங்கரனதடிககமலந்தமதிசயகமலமிசைநிறுத்தைத்தயல
பங்கினெழுத்தோரஞ்சமபனனினாபங்க்கருகணறனபணணிமாாகள. (௧௨)

வலலியாகளிருவருந்தமநிறந்துயிாபெறறபொருடடிமமாயிறசெயதாா
சொலலருமாதவநெடுநாளதுபொழுதுறசெழுங்கனகநதுங்கமேரு
விலலியுங்கிழமிடாருலவவேறமுகககடவுளுடனமேனகைதந்தோனுறல
புலமிபிருமருங்கேசுழமுனனாநினறுனெமமருங்குமபுலவாபோறற. (௧௩)

கண்டனையமொழிமடவாாகண்டனையகணணுதலைககளிபபிறைஞ்சுடும
வணடனையகுழலசாயமலாசிகரிடபகாபியடிமலாமேலவீழந்து
பணடனையாயகிலசராசரங்களெலலாமொருவயிறறீறறபயநதபசசைப
பெணடனையோாபங்குடையெமபெருமானைபபுகழ்சசிமொழிபேசலுறறுா. (௧௪)

வேறு.

மாறுமலவிருளுடைதாமருளினசுடாவடிவப
பேறுபெறகிறபாரவாபேறுகிபபெருமாள
பாறுதிலைபயினமுததலைவேலங்கைகொளபரமா
வேறுகொடியானையெழிலிடமாகொடியானை. (௧௫)

உருவமபயிலுயிாயாவினுமுளனுயிலனுய
பருவமபகலிரவாணடிருபகக்மபலவாக
வருவமபயிலகாலந்தனையளவிறறருமதுலா
பொருவெமபுலியுடையாயமிசைபுனையமபுலியுடையாய. (௧௬)

உளளிசசுடருருவந்தனையுணாவாாககருளுதவித

வளவிகருரியவஞ்சேடிபவதனனறனையருளும
வெளளிசசிலையானேபொன்னமேருசசிலையானே. (௧௭)

அந்திப்பகிர்மதியும்புனையரவின்றலைமணியுஞ்
சந்தித்துமிழ்சுடர்வீசிடுதவளப்புனன்முடியாய்
சிந்தித்தடியவரன்பொடுதிருநான்மறைமொழியால்
வந்தித்தழும்புடையாயமுலைவளையார்தழும்புடையாய். (கஅ)

தாணுப்பரவொளிமெய்ப்பொருள்சம்புத்தனிமுதலென்
றியாணர்க்கழல்புகழ்தொண்டர்களிதயப்பதுமத்தாய்
சேணுற்றமருலகுண்டிடுதிருமான்முதல்விண்ணோர்
காணப்படவெய்தாயெயில்கனலிறபடவெய்தாய. (க௯)

வசைக்காசுடன்மலினப்பவமாறறுந்தனிவாழ்வே
திசைக்காழகமொருசுறறிடுதெய்வத்திருவுருவா
நசைக்காமனதுயிருண்டருணயனுபயினலலோ
ரிசைக்காதரவுடையாயகுழையிணைககாதரவுடையாய். (உ0)

சண்டனறனதுரமேலுதைகொண்டநதணர்சலவன
மண்டுநதுயாமரணபபயமாறறுநதனிவரதா
வுண்டம்புதிவருநஞ்சினையும்பர்க்குயிருதவுங்
கண்டங்கரியானேமறைகருதறகரியானே. (உக)

காலைக்கதிர்போலத்திகழகவினார்திருவுருவா
மேலைப்பதமெயதாததுவிழைவார்ககருள்வேநதே
பாலைப்புரைநீற்றுயளிபாடுநதுணரிதழி
மாலைச்சடையானேபவமருளசசடையானே. (உஉ)

யாறுமொனதாருன்னருளெல்லாமெனுநல்லோ
ராறுரவருள்ளத்தெழுமறிவின்சுடரொளியே
மீறுமொளிமுதன்மேனிலைவிணடினமனைவிரவா
வாறார்தினகரனேமழுமானேநதினகரனே. (உந)

இலர்தங்களிலுனையலலதொரிறைகொளபவருளாேற
கலர்தங்கிடுநரகினறுயாகணடாரறிகிறபார.
மலர்தங்கியபதுமக்ககிரமணிபோலொளிர்வணகை
யலர்தங்கழலானேநடமாடுஙகழலானே. (உச)

வேறு.

நேயத்தெமையாளெனபபழிச்சிநெடுங்கணடாளநிரையுதுபபக
காயத்திரியுங்கலைமகளுஙகாலன்வெருவுங்கழல்பணியச்
சீயத்துரியோனவனைமுகநதெரிநதுமகிழ்நதேஞ்செய்தவத்தால்
வேயொத்திடுதோணமடவீர்காள்வேட்டவரமேதெனக்கேட்டான். (உ௫)

பொங்குமுலையாரொடுத்துளைபுயார்பொனனாள்பதியுமெம்பதியு
மங்கண்வராகமன்னமதாயளவாவடியுமணிமுடியு
நங்கையுமையுடனிக்கணவாநாங்கடெரியநல்கினைநீ
வெங்கண்விடையாய்வேறுவரம்வினவத்குமோவிளம்புங்கால். (உசு)

ஆனதெனினுமெங்களைநீயருள்கூர்தாலையாதலினான்
மேனியதனின்மங்கலமாம்விழுமநதரியோம்விழிமுகிழார்
தானமளித்தாய்விடறுகர்நதுஞ்சரமொன்றதனுற்றனதாவி
போனவயனுக்குயிருதவிப்புரத்தல்வேண்டுமெனவிரநதார். (உஎ)

அந்தமொழிகேட்டருட்கடலாமண்ணலினிதென்றயன்றலையும்
பந்தவடிவுமிவண்டருவீர்படர்வீரெனலும்பஃறலைய
நந்திபிருங்கிமுதற்பூதநாதரவர்போயநளினமிசை
முந்தைத்திசைமுகத்தலையுமுடைசேருடலுமுடன்கொணர்ந்தார். (௨௮)

மன்றாநடத்தோனவையிரண்டும்வாங்கித்தவளமலர்க்கோயிற்
கன்றாதளிக்கைக்கலைமகளுங்காயத்திரியுமெதிர்காண
வொன்றப்பொருந்துமிடந்தெரியாதுடன்றோகணத்தொட்டுவித்தான்
பொன்றுதுறங்கிவிழித்தவர்போற்புலன்கொண்டெழுந்தான்புகழ்ப்போதன். (௨௯)

எழுந்திம்மகக்கமலமகனிந்துமவுலியெம்மானைத்
தொழுதங்கனையாரிருவரொடுஞ்சுருதிமொழியாற்றுதித்திரங்கி
யழுதெங்கருணைவாரிதியேயடியேன்றத்திறந்திரிந்தபிழை
முழுதும்பொறுப்பாய்மேலுமதுமுயலாதருள்வாயெனமொழிந்தான். (௩0)

அன்னவரமாங்கரனுதவியயனேயினிமேலவலவினை
யுன்னலுரைத்தலுற்றலெனுமொருமூவகையுமொழிந்திடுவா
யின்னசெயல்யாரிழைத்தாலுமியாமங்கவரைவிடாக்கூர்ச்ச
சென்னிதடிவோமிதுதெளிவாய்திசைமாமுகனேயெனக்கூறி. (௩௧)

கலைமானறனைநன்முறைதிரியாக்காயத்திரியைமுகநோக்கி
யலைமான்புணருமான்மகனுக்காவியளித்தோமவளோடுஞ்
சிலைமானுதலீரயனுலகஞ்சேர்மினினியெனவாசிகர
மலைமானறழுவுமணவாளனமற்றவர்க்குவரங்கொடுப்பான். (௩௨)

பிடியார்நடையீர்நீங்கடாபிறங்குந்தடங்களிவையிரண்டிற்
படிவார்படியார்கருக்குழியிற்பரமானந்தப்பயன்பெறுவார்
தொடியார்கரத்தீர்நும்மியற்போற்றுறையார்புனலின்பட்டப்போ
முடியாதுலகிலெஞ்ஞான்றுமொழியவிளங்குமுகிழ்நகையீர். (௩௩)

தடங்களெவற்றுமிகப்புனிதந்தருமித்தடங்கள்கொம்பாவ
மடங்கவகற்றும்பெருஞ்சாந்தியளிக்குமாக்கம்பெரிதாகத்
மிடங்கொள்பணிலமுகுந்தனுக்குமெமக்குமவிருப்பமெப்பதாவிக்கும
வடங்கொண்முலையீரிவைக்குநிகராவாவியரிதாமவசுந்தரைமேல். (௩௪)

நித்தநியமநைமித்தநியமமுளத்தினிகழ்வேட்கைக்
கொத்தநியமமொருமூன்றுமுஞற்றுதவருமற்றத்துறையின்
முத்தியுதவுந்தவநெறியின்முயலாதவருமூழ்குவரோ
லத்தன்மையினும்பயனனைத்துமளிக்குநும்போற்றல்வாவி. (௩௫)

இக்குமொழியீரெனவருளியெவருங்காணவேறுகைத்து
நக்கன்மறைந்தான்மாதரொடுநளினன்றனதுநன்னகரிற்
புக்குமகிழ்வுற்றினிதிருந்தான்புண்டரீகன்செயலிதுவேற்
றக்கவறத்தின்றுறைபிழைத்தார்தலைமைபெறுவார்தவத்தீர்காள். (௩௬)

வேறு.

நனையுலாவனசத்தலர்வேதனார்நவிரம்வேறுபடுத்ததுமீளவே
மனைவிமார்கள்வழுத்தலுமீசனார்மறைபனுவலியளித்ததுமோதினோம்
வினையிலாததவத்துறைவாணர்காள்விளாகொணீரிவையிற்படிபேறெலா
மினையகாதைபடிப்பவர்கேள்வியாரெதிர்விளுவும்விருப்பினர்சேர்வரே. (௩௭)

காயத்திரிசரசுவதிதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௪0௧.

# காசிபச்சருக்கம்.

---

மறுகிலயனார்மனைவிமார்பெயர்கொணீரின், வேறுமொருகாதையதுகூறிடுவன் மெய்ந்நூ, லாறுதொழிலீரறிமி னந்தணனொருத்தன், பேறுதிகழ்காசிபனெனச் சொல்பெரியோனே. (௧)

ஆடியவையிற்றின்மகபாதகமகன்றே, பீடுபெருகுற்றன னெனப்பினருமன்பி, னோடினிதுரைத்தன னுணர்ச்சிமிகுசூதன், கூடுமுறைமாதவர்வினாவிவிடைகொள் வார். (௨)

யாதுவினைகாசிபனிழைத்திவையிரண்டின், சீதவறன்மூழ்கிடுபு தீர்வினையடைந் தான், சூதவருணீயுரைசெய்தொல்கதையெனப்பே, ரோதியிடுமாரமுதுவட்டிடுவ துண்டோ. (௩)

ஆசைபெரிதுற்றனமதன்வரவுதேருந், தேசிகநவின்றிடுதியென்றனர்கடெய்வப், பூசுரர்கள்சூதமுனியஞ்செவிபுகாமுன், மாசுகழுவுங்கதைவகுப்பனெனவோதும்.

பாண்டவர்குலத்துயர்பரீக்கிதுவென்மன்னன், மாண்டகடலாடைநிலமாதினைம ணந்தே, பூண்டறநெறிக்கணொருபுன்மைகலவாம, லாண்டரசிருந்தனன்முன்னத் தினபுரத்தின். (௫)

மாவிசயனல்குசுடர்வாளபிமன்மைந்தன், மூவிருபதாண்டுநிலைமுற்றியமர்கா லை, மேவுதிறலார்மிருகவேட்டைவிளையாட்டிற், றீவிரவுகானினிடைசேனையொடு சென்றான். (௬)

வையிலகுவாளிபடமான்றவனொர்மான்று, னொய்யெனமறைந்துகடிதோடியது காணான், வெய்யபசிதாகமிகவெம்பியிறைவேட்டை, செய்யும்வனமெங்குமதுதே டுபுதிரிந்தான். (௭)

ஆய்ந்துழலும்வேலைமறையாய்ந்துமனவேக,மோய்ந்துடைகொள்வற்கலையினோ டுபுலனோடக், காய்ந்திடுசமீகமுனியாங்குறைதல்கண்டான், வாய்ந்தசயவாளபிம ன்மைந்தனுரைசெய்வான். (௮)

ஞானமுனிதன்வதனநாடிநிலநாதன்,றுனொருவிலங்குகணைதைத்ததுயர்தன்னாற், போனதுகரந்ததுபுலத்தின்மிகுநும்மான், மானமுறலுற்றதுகொன்மற்றருளுமெ ன்றான். (௯)

கற்றமுனியுள்ளமதுகற்பனைகடந்தே, பற்றகல்பரத்திடைபடிந்தபடியாலே,சொ ற்றிலனதற்குவிடைசூழ்பொறிகொணெஞ்சோ, டொற்றுமைகொளாவழியுணர்ச்சி யிலவாமால். (௧௦)

தேட்டுறவினாயவழிசெப்பிலனெனத்தான், மூட்டுபுசிலைக்கடையினான்முனிவன் மேலே, காட்டுறுபிணப்பணிகளத்தினிலெடுத்தி, வேட்டைவினைவிட்டிறைவன்மே வினனகர்க்கே. (௧௧)

சீலமுனிதானருள்சிரிங்கியெனுநாமப், பாலனயலாசிரமமூடுபயில்வுற்றான், மே லைவினைநண்புகொடுமேவிடுமொருத்த,னேலுமுயர்பேரினிலிருங்கிருசனென்போன.

அக்கிருசனோர்பகலடுத்துறைகிரிங்கி, மிக்கமுகநாடியுளவேயனக்குமேன்மை
தக்கதிஃதென்றனதுதாதைகளமேலே, தொக்கருணபப்பணிசுமத்தலுணராயோ. ()

மேந்தகையபாடவம்விடுத்திடுதியென்றான், நீதிதுசெவிக்கொடுளோசென்றழிசிரிங்கி
கோதறமுளத்திலெழுகோபமுளனாகி, யீதபுரிவேந்தன்மிசைசாபமிடுகின்றான். ()

அத்தன்மிசைகாட்டுறையழன்பணியையேற்றி, வைத்தகொடியோனளவைவார
மவையேழிற், சத்திமிருதக்ககனெனப்பெயர்தரித்த, பைத்தலையினுற்கடிபடுகவிளி
சவென்றான். (கரு)

வேறு.

தனையனோதியசாபமத்தந்தையாஞ்சமீக
முனைவனுடிபுபுதல்வனுஞ்சிரிங்கியைமுகம்பார்த்
தினையவாய்மைநீயிசைப்பதோவிருவிலக்கிழத்தி
புனைவளோவளப்பெருங்கலன்றலைவனைப்போக்கி. (கசு)

உறுவர்நோன்பினுக்குறுமிடையூறெவரொழிப்பார்
நிறுவுவாரெவர்நெஞ்சினையறநெறிநிலைக்கட்
பொறுமையின்றியேசினத்தினைப்பொருளெனக்கொண்டோர்
பெறுவரோநலம்யாங்கணும்பகர்திநீபிள்ளாய். (கஎ)

சினத்தினால்வருந்தீமையத்தீமைதீப்பிறப்பு
மனத்தினீடியமருட்கையும்வறுமையுநரகு
மினைத்துநல்கிடுமாதலாலொருபொழுதயர்த்துந்
தனக்குநல்லவன்வளர்ப்பனோசீற்றமாந்தழலை. (கஅ)

நோன்றலால்வருமின்பமென்றலகெலாநுவலுந்
தோன்றனீயிஃதியம்பினைதுணிபுசூழாதென்
றீன்றமாதவனுளங்கனைந்தருளினாலிரங்கி
யான்றசீர்பயிலளப்பின்மாணுக்கராமவரின். (கக)

முகரிமைக்கிளர்கௌரமாமுகன்றனைநோக்கித்
துகளிலாவடற்றனஞ்சயன்பேரனைத்துன்னித்
தகவிறக்கப்பாந்தளாற்சாச்சொலித்தனையெம்
மகனிசைத்தனன்சாபமென்றுரைத்துவாவல்லை. (உ0)

எனவிடுத்தனனவனுமப்பரீக்கிதுவென்னு
மனன்மருங்குறீஇமீண்டனன்மற்றதுகூறி
வினைவிளைந்ததென்றிறைவனும்வெந்துயர்மேவி
யினியிதற்கெனோசீர்வெனுவெண்ணிநின்றினைவான். (உக)

தாலமுற்றவுந்தாங்குறுதனதொருசெங்கோல்
போலமாண்டிரைக்கங்கைநீர்நடுநிறீஇப்பொன்னங்
காலதொன்றதன்மீமிசைமண்டபங்கட்டி
மாலவன்பதவனசமேல்வழாதவன்பினனாய். (உஉ)

இருட்டருங்கடுமாற்றிடுமெண்ணில்பல்லுறைகள்
கருடனன்மறைவல்லவர்குழாம்பலகாப்ப
வருடயங்கொளிவானவராந்தணராசர்
பொருட்டருங்குலத்துற்றமாதவர்கணம்போற்ற. (உஙு)

விண்ணில்வெண்முகின் மேற்றலமெழுகியதவளச்
சுண்ணமெய்ப்பரின்றெளிர்தருஞ்சுடர்மணிக்கனக
வண்ணமண்டபத்தேறியேயபிமனல்வரமா
மண்ணல்லைவினன்றக்ககப்பேராக்கஞ்சி. (உச)

தங்கடொல்குலக்கதிபனுமமுதசந்திரிகைத்
திங்கள்வானவன்சென்றிடுஞ்சேணெறிக்கெட்டி
யங்கவற்கிஃதறைகுவான்போலவாண்டரச
னெங்குமொன்றும்வந்தெய்திடாதிருந்தனனிதன்மேல். (உரு)

பெருமனுத்துறைபயின்றவன் காசிபன்பெயரா
லொருவன்விப்பிரனுண்டவனுடையநல்குரவால்
வெருவுதக்ககன்விடங்கொளாதிறைவனைமீட்டுப்
பொருள்கவர்ந்திடுங்காதலான்வழிக்கொடுபோந்தான். (உசு)

சுடிகைநீணிறக்குடுமியின்றுளங்கிடவிளங்கும்
வடிவில்வெள்வரிமார்பின்முந்நூலதாய்வயங்கக்
கொடியதக்ககன்றனுமோர்குலமறையோனாய்
நெடியகாசிபன்வரும்வழிநேர்படவந்தான். (உஎ)

வாரியங்கெதிர்பாப்புருமறைத்துறுமறையோன்
சீரியன்றிடிகாசிபன்றனைமுகந்தெரிந்து
நேரிலாயெவண்சேறியோநீநினைந்தேகுங்
காரியம்புகலென்றனன்மற்றவன்கரைவான். (உஅ)

பாந்தளிற்கிளர்தக்ககன்பரீக்கிதுவாகும்
வேந்தனைத்துளைவெள்ளெயிற்றுமிழ்விடமென்னுங்
காந்துகாரமுற்கிந்தனமாக்குவான்கருதிப்
போந்துளானஃதவித்திடப்போந்தனனென்றான். (உகூ)

வேறிசைப்பொறிவிழியலாதுற்றிலான்வினவிக்
கூறுவானெதிர்கோதிலாவேதியர்கோவே
மாறிலாவபிமன்னெனுமன்னவன்மகனை
யீறுசெய்திடவிருந்திடுந்தக்ககன்யானே. (௩0)

மால்படைத்தனைபோலுநீவருடனாறேனு
கீல்படைத்தவெண்விடவலியாவருநீக்கற்
பால்படைத்ததோஷமுமாமிதுபடப்புரிவ
னால்படைப்பையேலரசையும்படைப்பையின்றறவோய். (௩க)

ஓம்படைக்கொணின்மனுத்திறங்காண்பனென்றுரகன்
காம்புடைத்தளிராலினைக்கறித்ததுங்கற்றோர்
மேம்படப்புரிதூலமெய்ச்சுத்தியில்வெந்து
சாம்பராயதத்தொன்மரமொருகணந்தன்னில். (௩உ)

இருவர்மற்றிவாறிவுறுதனுழையிருந்தா
னொருவன்மானுடனவனும்வெந்துறுதுகளாகு
னருவவந்தரத்தியங்குவாரம்பகஞ்சிமிழ்ப்ப
மருவுவானெலாம்பரந்தனவடமரச்சாம்பல். (௩௩)

அவனியுண்டவன்றன்னையோரிலையகத்தடக்கிப்
புவனம்பாவையுநிழலிடுபழுமரம்பொடித்த
கவனவல்விடம்பெருமையைக்காசிபன்காணூஉப்
பவனமுண்பவன்கேட்கவோர்சபதமுன்பகர்ந்தே. (௩௪)

காண்டியென்றவமுயற்சியின்பெருமையைக்கடுத்தித்
தூண்டுதக்ககவென்றுதன்மந்திரச்சுருதி
மாண்டநீதளவமுததாரைகண்மிசைவழங்கி
மீண்டும்வெந்ததுபடிறெனவடத்தினைவிதித்தான். (௩௫)

காளகந்தரன்காந்திடுமதனைவண்கமலத்
தாளுமந்தணன்றிரியவுண்டாக்குமாறறியத்
தாருடைத்தருத்தழைத்ததுதலைக்கொடாரகையாற்
கோளிவெண்முகைக்கொண்டதென்றதிசயங்கூர. (௩௬)

கதுமெனத்தரும்விஞ்சையர்கௌதுகம்போல
வதனமொன்றுடைவிதியனுன்வயங்குதொன்மரத்தைப்
புதுமரத்தினிற்புரிதலுந்தக்ககன்போற்றி
யிதுவெனக்கிறும்பூதுதந்திட்டதென்றிசைப்பான். (௩௭)

மாபுநாடிமுன்சமீகமாதவன்மகன்சபித்த
வுரைவழிப்படப்புரிகொடுந்துணைக்குவேந்தனும்
வரையதற்கிருமடங்குபொன்வழங்குவன்யானென்
றரவநாயகனளப்பிலாநவமணியளித்து. (௩௮)

ஈங்கனின்றுநீதிரும்பினையேகுதியென்றுன்
வாங்கிநல்கிவமணிகளைமன்னவன்வாழ்நா
ளாங்கணற்பமென்றறிவினாலறிந்ததுகொழுவேலா
னீங்கினன்றெனுநடந்தனனிருந்தனனிலையில். (௩௯)

ஏவரையுமனந்திரிப்பதுநின்றவர்தமக்குத்
தவறிழைத்திடப்புரிவதுந்தையலார்தங்கள்
கவரில்கற்பினையழிப்பதுங்கற்குநூற்கலைக
ளவையெலாங்கெடக்கெடுப்பதும்பொருள்விருப்பன்றே. (௪௦)

பின்புதக்ககன்றன்குலப்பேரராக்குழுவை
யன்பினாலழைத்தருந்தவவேடமீரமைந்தே
யின்புசால்கனிபற்பலவேந்தியவ்வேந்தன்
முன்புகொண்டுபோய்க்கொடுமினீரென்றனன்முன்னர். (௪௧)

அங்கதக்குழாமங்கதுபுரிந்தனவாங்கண்
வெங்கதக்கொடுந்தக்ககன்மிக்கதோரிரந்தைச்
செங்கனிக்குளோர்கிருமியாய்ச்சினவுருவொடுக்கித்
தங்கியுற்றனனொருவருந்தெரிவுறாத்தகையால். (௪௨)

அரவமாதவரீந்தவப்பலமெலாமரசன்
வரவுநன்றெனவாங்கியேவளைந்துதற்சூழ்ந்த
வுரவுசான்முனிவோர்களுக்கவைமுழுதுதவிக்
கரவுகொண்டியற்றக்கனிருந்தவக்கனியை. (௪௩)

பண்டுகண்டதிற்பரியதிப்பழமென்கரத்திற்
கொண்டிருந்தனன்மகிழ்வினுற்குருகுலக்கோமா
னண்டயோனியும்புரவலனழியுநாளறிதல்
கண்டுணர்ந்திடவமிழ்ந்தினன்கதிரவன்கடலில். (௪௪)

யாவதோவினிவிளையுமாறிறுதிசூழோரோ
மூவதாகியநாளுமின்றருந்தவச்சிரிங்கி
நாவினீடொரநவையுறுதென்றுநற்றவருங்
காவன்மன்னருங்கலங்கினாரன்னதோர்காலை. (௪௫)

ஏற்றதன்கையிலிரந்தையின்கனிக்குளோர்கிருமி
தோற்றல்கண்டிதுகறிக்குமோநமையெனச்சொல்லி
யாற்றன்மன்னவன்கழுத்தின்மேலழுத்தினனதனைக்
கூற்றுவந்துதன்மருங்குறீஇநிற்பதறிகுறியான். (௪௬)

செழுநறுஞ்சுவையிரந்தையங்கனியினுட்செய்ய
புழுவுருக்கொடுபுகுந்தவத்தக்ககன்பொருக்கென்
றெழுதருஉவெழிலிறைவன்மெய்யிறுகிடப்பற்றி
முழுவதூஉம்வளைத்திட்டனனென்பெலாமுரிய. (௪௭)

பெருகிருந்தவராதியர்பிறங்கொளிவேந்த
ரருகிருந்தவரவரெலாமஞ்சிவிண்டகன்றார்
கருகுபேரணற்கட்செவியுமிழ்கடுக்கனலா
டுருகிவெந்துநுண்டூளியாயினனுலகுடையோன். (௪௮)

நதிக்கணுட்டுமோர்கான்மிசைமண்டபநாப்பண்
மதிக்குலத்துயர்பற்குனன்றிருமகன்மகனைக்
கதிக்கொள்பாதலத்துறையராவணைந்துயிர்கவர்ந்தால்
விதிக்குமேலொருதெய்வமுங்கொள்வரோமேலோர். (௪௯)

வெருவுபாந்தளால்விளிகெனவேந்தனைச்சபித்தான்
கிருமியாகெனவரவையுங்கிளந்திலன்முனிவன்
மருவுமாறிதுபழவினைப்பயந்தெனும்வழக்காற்
கருவினூழ்வடிவேகொலாமுலகெலாங்கருதில். (௫0)

மண்ணினுடுடைப்பரீக்கிதுவென்பவன்வானோர்
விண்ணினூடுகைக்கொண்டபின்வேதியர்வேந்த
ரண்ணியார்தமரமைச்சர்மற்றனைவருங்கூடிக்
கண்ணியாற்றினர்மற்றவற்கிறுதியின்கடன்கள். (௫௧)

மாயுமன்னனுக்காஞ்செயன்முடித்தபின்மதலை
யாயசீர்ச்சனமேசயன்றன்னையன்றவர்க
ளுயகம்[illegible]றமணிமுடிமிலைச்சியேஞாலச்
சேயிழைக்குறுந்துயர்தணித்திருந்தனர்சிறப்பால். (௫உ)

வேறு.

இந்தநாளில்லிறைக்குயிர்நல்குவான், வந்துமீண்டமரபினைநாடியே
யந்தக்காசிபன்றன்னையறிவுறு, நிந்தைசெய்தனர்நீணிலத்தோரெலாம். (௫௩)

ஒன்றுப்பாயமுனைத்துமதனைநீ, யின்றுவல்லையிழைத்தியிருதடந்
தென்றிசைக்கடல்சேர்கந்தமாதனக், குன்றிலுண்டவற்றின்பெயர்கூறுகேன். (எஉ)

கஞ்சநாண்மலர்க்காயத்திரிமருள், வஞ்சநீக்குஞ்சரசுவதியென
விஞ்சைவாணர்விளம்புவர்மேலையோ, யெஞ்சுநதிமையிவைபிறநின்மூழ்கினுல். ()

[illegible]ற்றலம்புகலாகும்விளம்புநீர்க், காற்றுமேற்படுமாயினுங்காசிப
போற்றியாடுதிபோகுதியாண்டெனச், சாற்றினனபுகழ்ச்சாகல்லியமுனி. (எச)

தத்துவம்புகல்சாகல்லியன்பதந், கைத்தலத்திறவெருழுதுயர்காசிப
னத்தடங்களிரண்டினுமாடிவான், வைத்தசீர்க்கந்தமாதன சேவிக்கிய. (எரு)

விண்டுறங்கும்விலங்கலதன்கணுர், வண்டுலாமலர்வாவியிரண்டுடன்
றண்டபாணிவடுகனைத்தாழ்ந்தெழீஇக், கொண்டனான்முறைச்சங்கற்பர்கூறியே.

அனகநீரிலடைந்துகுடைந்தமுன், பனவனுற்றியபாதகம்பாறியே
தனியிருந்தனன்றன்பவம்போக்கிய, புனலின்கூலதொருசாறுப்போதரோ (எஎ)

ஆயகாலையழகணிபூண்டென, வாயில்வாமுருசரசுவதிமறந்
காயுங்காயத்திரியெறுங்கன்னியா, மேயிருரவண்வேதியனகாணவே. (எஅ)

வீங்குபூண்முலைமெல்லினல்லார்தமைக், தீங்குதீர்ந்ததிருமறைக்காசிப
ணுங்கணஞ்சலித்தன்பினரிவைமீர், நீங்கள்யாரொநிகழ்தறுமினென்றனன். (எகூ)

இலவுநேரிதழ்மாதரிருவருங், கலையின்மெல்லியல்காயத்திரியெறு
மூலகின்முதைக்குரியமனைவிமார், நிலைபினீரிவர்றென்றுநிலைந்தும்பாம். (அ0)

ஏர்படிந்தபடியிலெடுத்தவெம், பேர்படிநசபிரசமலர்த்தட
நீர்படிந்தனைநீயெனுங்காதலாற், சீர்படிந்தவரநாக்சேர்ந்தனம். (அக)

ஏல்வையிந்தவிரண்டினுமூழ்குவோர், பால்வழங்குநவம்பண்ணியபேறெலா
நூல்வயங்கொளிமார்பநுவலுநீ, மேல்வரங்கொளவேண்டியதென்றனர். (அஉ)

என்னைவேண்டியதென்றசொலின்சுவை, கன்னநுங்கினநுங்கியகாசிபன்
பொன்னினீடுகருப்பன்புகழ்மனைப், பன்னிமாரதமைப்பன்னிவழுத்துவான். (அங)

பூவிரும்பும்பொலஞ்சுடர்நான்முகத், தேவிரும்புநிருவுருத்தேவிமீர்
நீவிர்கற்குநெடுங்கலையாயினீ, ராவிரன்றியவற்றினபொருளெலாம். (அச)

சத்தநீவிர்பதங்களிற்றங்கிடும், வைத்தவாக்கியபேதவகையினி
லொத்ததாற்பரியத்தினுணர்ச்சிநீர், முத்திகாட்டுமுகரிமைச்சோதிநீர். (அரு)

எம்மையாளுமிறைவனிடத்துறை, யம்மையென்பதுமருதிருவெனபது
மும்மையேயன்றிநீங்களுணாநதுளோர்,மெய்மைதோந்திடலவேறிருவோர்களோ

ஆக்குவீருலகங்களனைத்தையுங், காக்குமட்டெனக்காக்கவும்வல்லிர்நீர்
நீக்கியாவர்நிலைப்பவருங்களை, வாக்கின்மேதகுமாமறையன்னையீர். (அஎ)

தென்புலத்தவர்தேவர்செயலெலா, மன்பினுங்களையன்றியுண்டாயிடா
முன்புஞாலமுளைப்பதையன்றியே, பின்புமீறும்பெறக்கணடிருப்பிர்நீர். (அஅ)

பூட்டுந்தேர்மிசைப்போதருமாதபன், காட்டுந்திங்களென்னுமற்கருவரி
யோட்டுகின்றவொளிகளையுங்கள்சீர், நாட்டமென்றெவர்நாடுந்தகையினர். (அகூ)

விண்ணுறுங்கள்விழியிற்பிறந்திடும, பள்ளமார்கடற்பாரகமெங்கணு
முன்னுங்காலுமதற்பலக்கண்ணிமை, கொள்ளும்போதுமுடியுங்குவலயம். (௧௦)

வேதமாகமமென்றுவிடைக்கொடி, நாதன்வாயிலுதித்திடுநங்கையீர்
யாதுநானுமையெய்த்திடவல்லன்றோ, நோதலற்றனனுங்கடங்காட்சியால். (௧௧)

அறத்துச்செல்லுமறிவுநெறியிலா, மறத்துமீளுமறிவும்வழங்குவீர், அறத்தின்
றெனைச்சூழ்ந்திங்கியாவருந், சிறப்புச்செய்யவுஞ்செய்மின்றிருவன்னீர். (௧௨)

நெருஞ்சிற்கோளிவையென்றுநிகழ்த்தியே, மருஞ்சிற்றுழ்கழல்வேவான்மனைவிமார்
பருஞ்சிறகஞ்சிச்சிவக்கும்பரிமளக், கருஞ்சத்தாள்கள்பணிந்தனன்காசிபன். (௧௩)

மேவுநான்மறைவேதியன்வேண்டிய, மூவாங்களுமூன்றுகொடுத்தயன்
றேவிமார்களிருவருஞ்சீதள, வாவிநீருண்மறைந்தனர்மாதரோ. (௧௪)

வீசுநீரினுண்மெல்லியர்புக்கபின், றூசிகூறியவையுந்தறவோரெலாம்
பேசியின்பம்பெருநண்புகொண்டிடக், காசிபன்றன்கடிநகர்மேயினான். (௧௫)

வேறு.

உலகிலன்றுயர்காசிபநாமமாமொருவனுக்கனைமாசறுகாதைகயா
நிலவுமிங்கிதுபேசிடுமாசையோர்நிறையுமன்பொடுகேள்விகொணீர்மையார்
பலருமைம்புலவேடர்களோடவேபழுதில்வென்றிகொண்மாதவமேமேய்
நிலத்துபங்கயநீண்மனைமாதராதிருதடங்களுமாடினராயரோ. (௧௬)

காசிபச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௫௦௫.

---

# பலதீர்த்தச்சருக்கம்.

---

ஓதுமுணர்சூதமுனியோதநெடுந்துறைமேவலைச்
சேதுநடுவுளபலநற்றீர்த்தங்களினைமுனிவீர்
பாதகத்திரவையிற்றின்பரிசுனைப்பனவற்றென்றை
மூதுணர்வீரொருகணமோசனமென்றுரைசெய்வார். (௧)

மக்கடமிலாரேனும்வந்ததனிற்படிவாரேன்
முக்கடனுநீங்கிடுவர்மொழிந்தகடன்மூவகையு
மெக்கடனேவெனவினவிலிருடிகள்வானவர்பிதிர்க்க
ளக்கடனுக்குடையோர்களவையாமாறறைந்திடுவன். (௨)

வன்னிநிலைமுயலாதான்மாதவர்தங்கடனுளன்
சொன்னமுறைமகம்புரியான்சுரர்க்கிருணத்தொடர்புடையான்
றன்னுயிராமகவில்லான்றன்பிதிர்க்கள்கடனுள
னின்னகடனொருமூன்றுமிதிற்படிவார்க்கிலையாகும். (௩)

இயற்பிரமசரியத்தினிருவகையாமுகப்பேற்றின்
முயற்சியுள்ளாராலுமுழங்கிருணமோசனநீர்
மயற்பிரியப்படிந்ததனால்வருமகிழ்ச்சிமருவலிலார்
செயற்பெரியசவுனகருந்திலகநுதற்றிருமுகத்தீர். (௪)

[illegible]பொருணல்குரவோனவனுமிதிற்படிந்தக்கா
[illegible]பொருணல்குரவோனெனப்படுவனுலகின்கட்
பெற்றகடன்பிறர்கேட்பப்பெறுவானுமதுடைந்தாற்
கற்றமுனிவீரவராறகடன்கேட்கப்படுவானால். (௫)

மொழிதருபேரிசற்கிருணமோசனமற்றதுசெயலாற்
செழுநறுநீர்த்தடமசனிறசெனருடியெல்லோருங்
குழுமுனிவீரகொண்டகடன்றொகடனீந்திடக்கடவா
ரொழுதுபெருங்கடனீர்த்தமிதன்கடனைபிஃதன்றி. (௬)

தருமமகன்முதலவர்தாம்வேள்விசெயறபொருட்டான்
மருவலர்நீத்தடமொன்றுவகுத்தனர்மறைகில்லைவகு
மொருபதினாயிரகோடியுபதீர்த்தமுறுகமதிற்
பரிதியெனுமாதிரணடும்பகலுமிரவும்பயிலும். (௭)

அட்டவசுக்களுமிருப்பாவர்தொகையின்மூன்றதிகம்
பட்டவுருத்திரர்குழுவும்பகரிமையோர்தாம்பிறரும்
விட்டகலார்புனலதனின்மேதகுநலலபிடேக
மெட்டரும்வானவர்பிதாக்களிருவர்க்குஞ்செயலின்பம். (௮)

துறைப்புனன்மற்றிதுமுகந்துசுராபிதிக்கடைமைநோக்கி
யிறைப்பவன்பால்வினைமுழுதுமிரிந்தோடுமினிதிருபப
னறைப்பதுமனுலகினவனறந்தடமீங்கிதன்றடந்தின
மறைப்பனவன்றனையூட்டில்வளம்பெருந்மிருமையினும். (௯)

நால்வருணத்தெவரேனுநலங்கெழுநீரிதுதோய்ந்தார்
மேல்வருணங்கொளப்பிறவார்மிக்கதினத்திதுபடிந்தார்
நீல்வருணவிழிகாணார்நிரயமிருள்வலிநெடுந்தேர்
கால்வருணன்றிசைமறையுங்காலையினுங் காலையினும். (௧௦)

கினைகதிர்வானிதுதன்னைநெடுங்கங்கைமுதற்றீர்த்த
மனைத்தினுஞ்செனருடினவனுவனிதிலையமிலை
யினைத்துயர்விளிதுநிற்கவிநதிரன்முன்னிமையோர்கண்
முனைத்தகுவர்கெடவேள்விமுற்றியதோதடமுண்டால். (௧௧)

சிறந்ததடமிது தேவதீர்த்தமெனுந்திருநாம
மறந்திகழமருவுமதிலாடினவரகமெல்லாம்
பறந்தகலுஞ்சுழல்கான்முன்பஞ்சியெனப்படிந்தவர்தா
மிறந்தொழியாப்பதம்பெறுவரொண்ணரும்பேரின்பமுடன். (௧௨)

சூழியதனீர்தோய்ந்தாற்றோன்றியநாட்டொடுத்திழைக்குங்
காழிரும்பாதகநீங்குங்கடவுளரிற்கதிர்மறைத்த
வாழியவனெனத்தீர்த்தமவற்றின்மிகுமிதினொருநாட்
டாழுமவன்சதவருடந்தழலோம்பும்பலன்பெறுவன். (௧௩)

இயம்பியவற்றருண்முனிவீரிரட்டிறவெண்ணலிரிந்தப்
பயம்படியவதில்வாசம்பண்ணவரும்பரிசிலர்க்கு
நயம்பெருகுங்கொடைபுரியநண்ணுதிங்கெல்லோர்க்குஞ்
சயம்பெருகும்பரிமேதந்தரும்பேறுதருமிந்நீர். (கச)

வானவர்க்கும்பிதிர்க்களுக்குமாதவர்க்குமகிழ்ச்சிதருந்
தாநறுநீரிதுசேர்ந்தார்சரிவளைமால்பதஞ்சேர்வா
ராலியமாறைந்தொருநான்கன்றியொருமூன்றிரண்டு
தானெனினுமிதிற்றரிப்பான்றுயுதரந்தனிற்றரியான். (கரு)

பகலொருமூன்றிதிலாடிற்பகர்வாசபேயமெனு
மகமதன்பேறுளதாகுமனத்தினினைத்திடேவாருஞ்
சகலபவங்களுமிந்நீர்த்தடத்தமரர்பிதிர்க்கடமைப்
புகலுமுறைபூசித்தாற்புகுங்காமப்பொருளனைத்தும். (கசா)

இட்டமுழுதியற்றியபேறெய்துமிதற்கெதிராகப்
பட்டதொருதடமில்லைப்பரவுமிகபரமிரண்டுங்
கட்டலும்பெருங்கதியுங்காதலித்தோரிதிற்படிவர்
சுட்டியிதன்றகையுமக்குச்சுருக்கியுரைத்தனன்றவீர். (கஎ)

என்னுமுரையிலடங்கிடாதிதன்பெருமைமிகல்வாலி
தன்னிளவலிரவிமகன்றன்னுமத்தொருதீர்த்த
மனனுமதுதனிற்படிந்தோர்மார்த்தண்டனுலகடைவர்
பின்னுமவர்பரிமேதப்பெருவேள்விப்பலன்பெறுவார். (கஅ)

தரமகற்றுமதிற்படிந்தாற்சகத்திரகோதானபலன்
வருமனத்திநினைத்தக்கான்மறையோதும்பலன்பெறலாம்
பிரமகத்திமுதலாகப்பிறங்குபெரும்பாவமெலா
மொருவுமிதன்புனலாடியுபவாசமுளுற்றியக்கால். (ககூ)

தேட்டமுடன்மனமகிழத்தென்புலத்தார்தேவர்தமை
யாட்டியவனந்நீராலத்தோர்யாமத்திருப்பே
ரீட்டுமகமிழைத்தபலத்தெட்டுமடங்கெய்திடுவன்
கோட்டமிலிந்நீர்குளித்தோன்குறித்துணருங்குலத்தன்மை. (உ0)

இன்னதடந்தனிற்படிந்தோரிசைக்கரியபேரின்ப
நன்னலஞ்சேர்நரமேதயாகபலநண்ணிடுவ
ருன்னியவையுளவாகுமுளுற்றுதவமுனிவீர்காள்
சென்மின்களிலகுகதிர்த்தினகரன்செய்தீர்த்தத்தில். (உக)

கொண்டனளன்பெயர்த்தீர்த்தங்குளிக்குமவர்வினையொழிக்கும்
விண்டலமேற்றிடுமெல்லாவேள்விகளின்பயனுதவு
மண்டரையும்பிதிர்க்களையுமதில்வைகிமூன்றுதின
முண்டிமறந்தருச்சித்தாருதயகதிரெனப்பொலிவார். (உஉ)

காலும்வெரின்படுகடுப்பிற்கடிதுரகமேதமகத்
தாலுளதாம்பயனுமுறுமஃதன்றியமலவன்சேய்
நிலனிருந்தடங்குடைந்தோர்நீள்சொன்னயாகபல
மேலுமதிற்பதின்மடங்கெய்திலங்குமழலுலகடைவர். (உ௩)

பங்கமில்சீர்ப்பசுக்கண்ணன்பட்டமதிற்படிந்தோர்கள்
புங்கவிர்காளொருநாளும்புக்களற்றிலமிழ்ந்தார்கள்
சங்கமிகுஞ்சுரர்கற்பதருநிழற்கீழரசாள்வார்
கொங்கவிழ்தாரங்கதன்பேர்கொண்டபுனற்குளித்தோர்கள். (௨௪)

கயஞ்சரயனரன்பனசன்கவயனெடுங்குமுதன்முத
னயன்குலவுவானரங்கணல்கியநீர்நானங்கள்
பயன்பெரியவீடுதரும்படிந்தவர்க்கோர்பட்டமுள
தயன்புதல்வன்மகன்சேயாமணிதிகழ்வீடணனபெயரால். (௨௫)

ஒழியுமதினமூழ்கினர்பாலுற்றதுயர்பிணிபாவம்
பழிபுரிவார்விழுங்கும்பிபாகமெனும்பவர்க்கவிருங்
குழியதனிற்றுளியார்கள்கொடியகளுமிடியகலு
மழிவிறிருவையுண்டமடைவரவரறவீர்காள். (௨௬)

தேனாறுங்கார்வீடணன்சீர்த்திறலமைச்சரொருநால்வர்
நானநறும்புனறபொய்கைநான்குவகுத்தனரவற்றின
பானணையுமவர்பாவம்பரியுமுபவீதநடு
மானமதுதீர்த்தமெனவகுத்துரைத்தான்மலர்வேதன். (௨௭)

கரையிலருட்கடலாகுங்கவுசலைசேயருச்சித்த
திரையுடைநீர்வேணியனைச்சேவித்தற்பொருட்டென்றுஞ்
சரயுநதியும்பயிலுந்தடங்கந்தமாதனத்திற்
புரையகலும்படியதனிற்புகுந்தாடும்புவியெலாம். (௨௮)

தன்னிகராமக்கிரியிற்சரயமுதற்றீர்த்தங்கள்
பன்னுகின்றகோடிசலையிட்டபதினாயிரமு
மன்னுகங்கைமுதனதியும்வாரிதியேழும்வனமுந
தொன்னிலைசேர்மாலிடமுஞ்சோதிபலிலாலயமும். (௨௯)

பொன்றருநாட்டவர்சித்தர்புகலிசைக்கின்னரரியக்கர்
நன்றிதெரிமுகரிமைசானற்றவர்மறறவரோனைத்
தென்றலையபுலத்தருந்தாஞ்சேறுவினகண்வீறறிருப்ப
ரென்றும்வரிசிலைக்குருவாமிராகவன்றனாணையினால். (௩0)

வேறு.

இகலிலாப்பொருள்படநவிற்றினேமிரவிகோத்திரவிறைகளைக்கணர்
சகலதீர்த்தமகிமையுமக்கரோதவருருத்திருமுனிகணத்தரோ
புகலுமாக்கதையிதுபடித்தபேர்புகலிலாச்செவிவழிவிடுத்தபே
ரகிலமாற்பெருவினையொடுக்கியேயளவிலாக்கதிநிலைகொடுக்குமே. (௩௧)

பலதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௨௫௩௬.

# இராமநாதச்சருக்கம்.

---

ஏருலாவுஞ்சூதனமீண்டுமுனிவரோடியம்புவான
சீருலாவுசெவியினூடுசென்றுபுக்கவளவிலே
காரினீடிமிருடுராந்தகதிவழங்குகாதைபோன
மேருவில்லிராமநாதன்மேன்மைகேண்மினென்றரோ. (௧)

ஏவாகண்டகண்ணிமேறார்களோசலாதகோசலக்
காவனம்பியன்பிறேங்கந்தமாதனத்திலே
தாவனஞ்செய்முக்கண்மூர்த்திதன்னையனணிதலைமையோர்
மேவனந்தவின்பஞானவீடுசேர்வர்மெபமையால. (௨)

முதலுகத்திறுண்டுபத்தினமுறறுகின்றபுவனியப
மதுதிரேதநலலுகத்தொராரணடினெய்துமஃதுறந
துதிகொடிங்களொனறினிறறுவாபரத்தினயபலங்
கதிருலாவுவாரமொன்றிலூரவுநீடுகலியுகம். (௩)

பாடிலாதகலியுகத்தொர்பகலினமேவுபயனிறுங்
கோடிகூறுமிதுதிகொணடகோதிலாதநல்லற
நாடொறுதமிடமொன்றினணைறுமாயநூன்முகன்
றேடிராமநாதனைநதைதெரிசனததிறுலரோ. (௪)

ஊங்குளாாபிதிர்க்களையருதககோடிபிறவுமா
யீங்கணவையமுயயநீடிராமநாதனிருபதந
காங்கருதிதின்வாரமொன்றுதானிரண்டுமூன்றுதா
னீங்கலினறியெனறுமேனும்யாவரன்பினினைகுவார். (௫)

தங்கள்றவீறமிக்கசண்டனெஞ்சுகொண்டிடான்
கங்கைசூடிபுகழியம்புகாதலோர்கள்காதிறுல்
வெங்கண்மேதியோனைதயுண்டுவிடமமுற்றழுங்கிடா
ரங்கமாயுமனறுதாமகண்டஞானமாகுவார். (௬)

போரின்மல்கிராகவன்பூசைசெய்தபுனிதனை
யாரிழைப்பரர்ச்சனைபவர்நரர்க்குளல்லர்தா
நீரவேணியண்ணலார்நிமலமேனியாகுவார்
வாரமோடுவழிபடார்வீழ்வர்மாயவாரியுள். (௭)

அந்தலிங்கமூர்த்தியையகத்திலுன்னல்செய்கிலான்
வந்துகாணவில்லவன்வரம்பிலீகைதவமகர்
தந்துமிக்கபாவியாய்த்தனயர்மாடுதாரையோரீஇ
யநதன்மூகன்வதிரன்மண்ணையாய்வருந்துமறிவுபோய். (௮)

அத்திநாகநாரியிற்றுவக்கிவெற்பலைத்தநா
ளத்திறல்குமாலமுண்டவருளிராமநாதன்மேற்
பத்திசெய்யுமக்கடான்பணிந்துபூசைபண்ணுவார்
புந்திமாழ்குபுன்கணோடுநேவுனார்புகுந்திடார். (௯)

ஐந்தநூற்றிரட்டிகொண்டபிரமகத்தியயுதமா
மூன்றதேற்றுண்டதீமையோரிரண்டுமாதியாம்
பந்தமாயகோடிகோடியுற்பவப்பவக்குழாஞ்
சிந்திஞாலமன்னனுக்குமவ்விலிங்கதெரிசனம். (௧௦)

வேறு.

அரும்புகழிராமலிங்கந்தனையெதிர்கண்டுளோருக்
கரும்பவிழ்பதுமன்மாயனாகியதேவர்தம்மா
லிரும்பிரயாகைகங்கையிவைமுதலிலங்குநீரால்
விரும்பயனில்லையுண்டாமானுடப்பிறவியாக்கம். (௧௧)

வருவதோர்தொடர்ச்சிதன்னான்மனங்கவர்மகிழ்ச்சிதன்னால்
வெருவினாலுலோபந்தன்னால்விளங்குமவ்விலிங்கந்தனைக்
கருதினோர்புகழ்ந்தோர்செய்தகடுங்கொடுவினைகளெல்லா
மெரிகொளிந்தனமாமேவுமிகபரமிரண்டிலின்பம். (௧௨)

எட்டியவுருவாய்நின்றவிராமநாதன்பாற்றொண்டு
மெட்டியல்பாகுமிந்தவிலங்கொளியிலிங்கந்தன்னி
லெட்டுணையன்பர்மாட்டுமினியநண்புடையனாத
லெட்டருமகிழ்ச்சிகூர்தலிழைத்திடும்பூசைதன்னில். (௧௩)

அவ்வருளுருவந்தன்னையருச்சனைசெயலதற்காக்
கைவினைவருந்தன்மிக்ககாதையிற்காதல்கூர்தல்
பொய்விரவாதவன்பாற்புகழ்மொழிகுழறிக்கண்ணீர்
மெய்வழிந்திடவடங்காமேனியிற்புளகந்தோற்றல். (௧௪)

கோலமார்வடிவமென்றுங்குறித்திடல்குறிகடந்த
சீலமாரவ்விலிங்கசேவையாற்றமதுசீவ
பாலனம்புரிதலாகப்பத்தியின்கணிதந்தானோர்
நாலிரண்டாகுமுண்மைநவின்றிடினற்றவத்தீர். (௧௫)

மூடனதிடத்துண்டேனுமொழிந்தவையெட்டுமுத்தி
நாடதற்குரியனன்னோனற்றவப்படிவின்மிக்கீர்
நேடருமுன்னில்வேறுநேயத்தாற்பிரமவுண்மை
பீடுசால்காட்சிதன்னாற்பிறங்கிடும்பிறழாமுத்தி. (௧௬)

மொழிதருமுத்திவேதமுடிபுநூற்கேள்வியாலே
யிழிபெலாநீத்தோர்க்கெய்துமிலங்குவேதாந்தஞானம்
வழுவிலாத்துறவுமின்றிவளங்கொளாச்சிரமமின்றி
யுழிவினால்வருணத்தார்க்குமகிலவாச்சிரமத்தார்க்கும். (௧௭)

திருந்துசீரிராமநாததெரிசனமதனினாலே
பொருந்திடுங்கருவின்மீளப்பொருந்திடாப்புனிதமுத்தி
திருந்திருநிலவுமந்தத்தலத்தினிற்கிருமிகீட
மிருந்தவர்தேவரெல்லாமேற்றமுங்குறையுமில்லார். (௧௮)

அனைநிகரிராமநாதனருணிலையொத்தலாலே
வினைபலவிளைத்தோமென்றுவெருவரல்வேண்டாம்யாருந்
தினைமதித்திடலுமாகாதவத்தினேனென்னப்பானுக்
கனையிருளகற்றலொன்றுங்கற்றவர்மற்றவர்க்கும். (௧௯)

சீரணியிராமநாததெரிசனம்பண்ணினுக்
காரணநான்கும்வல்லவந்தணன்றனுமொவ்வான்
றாரணிவணங்கிராமேச்சரன்றனைக்கண்டோர்தம்மிற
பேரணியோகவாணாபெறுகதிபேதமில்லை. (௨௦)

திங்களங்கண்ணிவேணிச்சிவபிரானிராமநாதன்
பங்கயமடவாயுஞ்செம்பொற்பதந்தொழும்பண்பினனைத்
தங்கடம்விழியாற்கண்டோர்பாவமுந்தணந்துபோமா
லங்கணனருளாலங்கணுவதோர்கணமதொன்றின். (௨௧)

மாசிலாவிராமநாதன்மலரடிவணங்கவில்லான்
பேசுநான்மறைகற்றுளும்பெருங்கொடைக்கருகனல்ல
னீசனுமிராமநாதனிடத்திலன்புடையோன்றாளிப்
பாசகனெனினுமீகைபாத்திரமவனேயாவன். (௨௨)

அத்தலத்திருப்போரெல்லாமானனைமந்துமேந்துங்
கைத்தலத்திளையமானுங்கனலுமிழ்மழுவுங்கங்கை
வைத்தவெண்டிங்கள்வேணிமவுலியுமருங்கிலார்த்த
சித்திரவதளும்போர்த்தசிந்துரவுரிபபிறக்கும். (௨௩)

பூசியதவளநீற்றிற்பொலிந்தெழுதவளச்சோதி
வீசியவடிவும்வெள்ளைவிடைநெடுங்கொடியுமேவிக்
காசறுகண்டத்தின்டோட்கண்ணுதற்கடுக்கையந்தார்த்
தேசுடைபிராமநாதன்றிருவுருவாவர்திண்ணம். (௨௪)

இருந்தருமிராமலிங்கமிருக்குமூர்க்கேகுவார்க்குப
பதந்தொறும்புரவிமேதசம்பண்ணியபலமுண்டாகும்
விதந்கெழுமலர்நீர்பனனமெனகனிவழங்குவாரைச
சிந்தைநிடாதருளுமென்றுஞ்சிவபிரானிராமநாதன. (௨௫)

சேதனர்வணப்பதருஞ்செல்வச்சேதுவிற்றிகழிராம
நாதனன்மகிழச்சிகூர்நானமறைக்குலத்தொருத்தர்க்
கோதனம்பிடியொன்றாட்டுமுத்தமருாகசெனனி
யாதனமிருக்கும்பூமியடங்கலுமளித்தோராவா. (௨௬)

நாவினாலிராமநாதனல்லருள்வழுத்துநாளும்
பூவினாற்பூசைசெய்யப்புகழ்ந்திடச்சேதுவின்கட்
சாவுறக்கிடையாதியாக்குநதானுவேநீயேதானு
வாவதென்றுணர்வார்வெனறியடைகுவரிங்குமங்கும. (௨௭)

கார்த்தருகளததினைக்கவுசலைமதலைபோற்றுந
தீர்த்தசனைநினைக்கின்றோசிறநதவருலகிலெல்லாம்
பார்த்திருவின்பமுத்திபயனுறப்பணியாரந்த
மூர்த்தியைத்தொழுவார்க்குண்டாமொழிதரும்பலன்கண்மூன்றும். (௨௮)

திருமிகுமிராமலிங்கதெரிசனமதனின்மிக்க
தருமமுமிகருமின்றத்தானுவைநெஞ்சிலெண்ணு
ரருமறைப்பிரமகத்தியாயிரப்பத்திழைத்தோர்
வருநரகவரொடம்மாமாற்றமொன்றியம்புவார்க்கும். (௨௯)

வேதநூல்சாத்திரங்கள்வேள்விகளெலாமிராம
நாதனேபிறிதொன்றில்லைநம்பனையவனைத்தானே
யாதரவதனாற்போற்றியடிதொழல்வேண்டுமென்றேன்
றூதவிழ்சரோருகப்பூஞ்சரணமேசரணமானோர். (௩௦)

இடுக்கணுமெவையுநீங்கியாகங்கடவங்கள்யாவுங்
கொடுத்திடதீர்த்தமெல்லாங்குளித்திடல்செய்யும்பேற்றி
லடுத்ததோர்கோடிகூறுங்கதிகமாமறனுமெய்தி
வடுத்தவிர்சைவநாட்டில்வைகுவரொன்றுமாதோ. (௩௧)

நன்னலங்கூரிராமநாதனையிரண்டுகன்ன
லுன்னல்செய்திடுவனாயினொருவன்மூவேழுகொண்ட
தன்னிருஞ்சுற்றத்துளளார்தம்மையீடேற்றித்தானு
மின்னநீசிவபுரத்தில்யாவருமேத்தமன்னும். (௩௨)

பொழுதிலொன்றிராமநாதன்பொன்னடிக்கமலந்தன்னு
ளெழுதிறேனிகத்தும்பின்புற்றீற்றிலவ்விறைவனுவன்
கெழுதருங்காலையநதக்கிளரருட்குறியைநெஞசாற்
றொழுமவன்சிவனுங்கொண்டதுவக்குடம்பதனிற்றானே. (௩௩)

காலையவ்விலிங்கங்காணிற்கறையெலாம்பறையுமுச்சி
வேலையில்வணங்கிற்றேறன்மிசைநதீங்காயிரம்போ
மாலையிற்பணியத்தீருமாதிருகமனங்கீர்த்திப்
பாலையப்போதுகூறிறபாறுமாயிரம்பொற்சோரம். (௩௪)

கண்டவர்பாவவெற்பைக்கணத்தினுண்டூளியாக்கு
மொண்டிறற்சூலவேற்கையும்பர்கோனிராமநாதன்
முண்டகக்கழறகால்போற்றிமுற்றிடாக்கருமமறறை
யெண்டராததருமகோடியாவையமீகிலாவே. (௩௫)

செங்கணேறனவிராமன்றிணிசிலைக்கோடிமூழ்கி
யங்கணனிராமநாதனடிபணிந்தடையும்பேறு
கங்கையிற்கிடையாதன்றேன்கழறொழார்கரவிலன்றித்
தங்குலத்துரியவையர்தம்வயிற்றுதிசதாரல்லர். (௩௬)

எற்படவெழுந்துமுக்காலிராமநாதாவென்றக்கான்
மூற்பகற்பவங்கடீருமொழியுமவ்விலிங்கமூர்த்தி
யற்பினர்க்கருளவேண்டுமாதரமேவியென்றும்
விற்பயில்கதிராங்காணும்விழியினர்துயர்ப்பனிக்கே. (௩௭)

ஈண்டுயிர்விடுங்காலுள்ளத்திராமநாதாவென்றெண்ணின்
மீண்டிவண்வாரான்முக்கண்விண்ணவனுருமெய்மெய்
யாண்டருளிராமநாதாவணிகொண்மாதேவாவந்தண்
காண்டருகடலேயென்பான்கலிவலிநலிதலில்லான். (௩௮)

ஐயர்காள்யாவரோனுமாக்கையஞ்சிறையிற்றீரா
வுய்யுமாறன்பினீலலோகிதாவுலகநாதா
செய்யசீரிராமநாதாசெஞ்சடைமுடியாவென்பார்
[illegible]யகவடிவமாகுமாயையான்மயங்கலில்லார். (௩௯)

தன்னிகரிராமநாதாசதாசிவாநீலகண்டா
பன்னுமாதேவாவென்பார்பண்ணியபாவம்பாறு
மின்னுவேற்காலகாலாவேலைவாய்விடமயின்று
மின்னருளிராமநாதாவென்பவர்சினங்கொண்டெஞ்சார். (சo)

ஏயசீரிராமநாதாவிளநிலாமுறுவலாலே
தீயவர்புரங்கண்மூன்றுஞ்செற்றமாதேவாசெல்வ
மேயசங்கரனேயென்பார்வேணவாவீக்கமென்னும்
பாயுநீர்வேலைமூழ்கார்பயிறவப்படிவமயிர்காள். (சக)

அருளுடையிராமநாதனமர்ந்தருளாலயத்தைத்
தருவினூற்றருவோன்சுற்றந்தன்னின்முக்கோடிசுற்ற
மருவுவான்புகுதுங்கோயில்வளங்கொளிட்டிகையாற்செய்தோன்
திருமறுமார்பன்வாழுஞ்செல்வவைகுண்டஞ்சேரும். (சஉ)

கற்கிளர்கற்கிசெய்தோன்கமலனூராளுங்காம
ரொற்கெழுபளிங்குதன்னாலிலங்கொளிவிமானஞ்செய்தோன்
பொற்கொடிவிமானத்தேறிப்புரஞ்சிவபுரத்தனாங்கர்ச்
சிற்குணனுடனிருப்பன்சேதிமஞ்செம்பாற்செய்தோன். (சங)

வெள்ளியானிகேதனத்தைவிருப்பினால்விதித்தோன்முக்கண்
வள்ளறன்வடிவமாகிவரம்பிலாமகிழ்ச்சிகூருந்
தெள்ளுசீராடகத்தாற்சினகரஞ்செய்தமேலோ
னுள்ளுணர்சிவக்கொழுந்தாமொன்றுடனிரண்டின்றுவன். (சச)

எல்கெழுதிங்கள்வேணியிராமநாதன்பொருட்டு
மல்குசீராளன்செய்தவரம்பில்பொற்கோயிலுக்கு
நல்குரவுடையோன்றந்தநலங்கொண்மட்கோயிலுக்கு
மொல்கலில்பயன்றுனென்றுமுதவிகொண்டோர்வனாத்தால். (சரு)

அருகுசேர்பாடலாடலபிடேகவேளைதன்னின்
முருகுறுமுன்னியங்கள்காலமூன்றினுமியங்கச்செய்வோன்
றிருகுவெம்பவங்கணீங்கிச்சிறப்பினோடிமையவெற்பின்
மருகனுமிராமநாதன்வளர்சிவபுரத்தின்வாழ்வான். (சசா)

அண்ணலாமிராமநாதனபிடேககாலங்கன்னி
னண்ணுசீருருத்திரத்தைநமகமார்சமகந்தன்னைப்
பண்ணமர்பவமானத்தைப்பஞ்சசாந்தியைமுன்னாக
வெண்ணுமாமந்திரங்கள்யசுபுவானிரயமெய்தான். (சஎ)

ஆறணியிராமநாதனணிமுடிக்கபிடேகத்தைப்
பாறயிரானநெய்யாற்பஞ்சகவ்வியத்தாலீசற்
கேறமற்றவற்றாற்பண்ணுமியல்பினாலெய்துகின்ற
பேறதன்பெருமைகேண்மின்பேசுவன்பெருந்தவத்தீர். (சஅ)

இலவிதழ்முகிழக்கொங்கையிடம்பயிலிராமநாத
னலைபுனைமுடியிலான்பாலதனினாலாட்டுகிற்பான்
றலைமுறையேழுமூன்றுந்தமரொடுந்தருக்கிவாழும்
புலவர்போற்றிசைக்குழக்கட்புராதனன்சிவபுரத்தில். (சகூ)

அளையிஞலாட்டுவிப்போனகனறதிங்களைத்துமங்கை
வளையிஞன்வைதண்டத்தினவைருவனமறுவிலாத
இளைகொளாவெனயிஞட்டகமிடைக்குமேலொருவர்க்கன்ருேஞ்
விளையுமோர்கறபத்தாறறும்வினைக்குழாம்விளிவுற்ருேடும். (௫0)

தேனிஞலாட்டுவிப்பான்றிசைமுகனுலகஞ்சேரு
மானவெட்டயிலதாட்டுமவன்புருமளகையநதண்
மேனிலாமதியூரொய்தம்விருப்பஞ்சால்கருப்பஞ்சாற்றிற்
ருணிநிதிராமநாதனைசடைமுடிதன்னிலாட்டில். (௫க)

ஈட்டுசம்பீரநல்தமெபினறங்கனியின்சாற்ரு
லாட்டுவாரெனபுலததாரமருலகதனிறசோவர்
தேடுறுமினநீரனைறாரிருநதபிடேகஞ்செயவா
ரோட்டுவாருமானமாாபருயிர்க்கொலைமுதலபாவம். (௫உ).

குரமபுசேரிரமலிங்கநதனிாநிடவிளைநதசெயய
வரமபையபாகனிகள்சாத்துமவனபமொனருட்டின
வரம்பிலாவரிசைமேவுமவடித்துவெளமுகிலினுலே
நிரம்புநீராட்டுவியபானீரிரைநிலைமைசேரும. (௫௩)

சநதனநறுங்குழம்புசாததுவானறயக்துபாட்ட
கநதருவநதர்வாழுங்கடிநகரடைவன்கஞசக
கொநதலர்வாசமேவுங்குளிாபுனலாட்டுவிபபா
னிநதிரனேஞமன்ருனிருக்கையுற்றின்பங்கூாவன. (௫ச)

பாதிரியலரிபுன்னைபாசடைக்கமுநீாபூநத
போதிவை கமழுமநதணபுனலிஞலாட்டுவிப்பான்
கோதிரிதோடமேனைக்கொழுமலர்முணங்கலநத
சீதநீராட்டுவிபபானசிவபிரானுலகஞ்சேரும். (௫௫)

பொருபபுறமேலங்கோலம்பொலங்கெழுமுசிரம்வண்டேர்
கருபபுரமிவறறினுறறங்கட்டியவுதகநதனனை
விருபபிஞலாட்டுவிபபாாமேதகுதிருவினேடு
செருபபெறுநகடவுள்வாழுநீணகாநிலைமக்கொள்வார். (௫சு)

மண்ணிஞலமைநதகும்பமாநதிவாவியாதி
நண்ணுநீர்முகநதிராமநாதனுக்கபிடேகநதான்
பண்ணுமாறுதவுகிறபான்பதிறறுபபத்தாண்டுகாறும்
புண்ணியத்திருவினீடிபபுடவியில்வீற்றிருப்பான். (௫எ)

தாமிரத்தகும்புதநதோன்சதமகனுருந்தாரத்
தாமெழிற்குடங்கீநதோனம்புயாசனனுமொய்து
மேமநறகுடங்கொடுத்தோனீசனூர்மருவுமேழை
வாமனுராருகிருப்பன்மணிக்குடம்வழங்கினுனே. (௫அ)

நாறபுவிபோற்றிராமநாதனுக்காட்டற்கேனு
நீற்பொலிகண்டத்தன்றேனிவேதனமதனுக்கேனும்
பாற்பசுவுதவுநல்லோன்பரிமேதபலமுமெய்தி
மேற்பரஞ்சுடராயென்றும்விளங்குவன்சிவலோகத்தில். (௫கூ)

ஆரமுததனிருட்டிமவன்பயனுண்டுறாறு
நோயாளிகழ்த்தலாற்றேனீடனுக்கோடியாடி
யாரிறையிராமநாதாவென்பவரவர்சென்றெர்த
காரமுழ்கிடினுஞ்சேதுகணைந்திடும்பேறுநண்ணும். (௬௦)

சிவந்தருமிராமநாதன்சிகரநீள்சேத்ரமத்தை
நவந்தரப்பழமைநீக்கிநலங்கொளப்புரியுமேலா
விவந்தவக்கோயின்முன்னந்நீணிலந்தன்னிற்கண்டோன்
றவந்தருமளப்பில்பேற்றிற்சசமடங்குடையனுவன். (௬௧)

சின்னமாமிடத்தைமுன்போற்செய்பவன்பிரமகத்தி
தன்னிலோரயுதந்தீர்ப்பான்றுணுவாமிராமநாதன்
முன்னெறிதீபமிட்டோன்முந்துணர்முழுதுமுண்ட
மைர்விறமருட்கைநீங்காமலவிருடிரக்குமாதோ. (௬௨)

சருக்கரைசெய்யசாலித்தண்டுலமெண்ணெயானெய்
பருப்பவைவழங்குமன்பர்பண்ணவர்க்கண்ணலாவர்
பொருப்புவிலிராமலிங்கம்பூசனைபுரியக்காண
வுருப்பொலிவுணரத்திண்டவொழிந்திடும்வினைகளெல்லாம். (௬௩)

நாடியபுகழிராமநாதனுமம்பலத்து
ளாடியையுன்னிக்கண்டையாடியையளிக்குமன்பர்
கோடியகனகச்சில்லிக்கொடிஞ்சிநூறுடையராகி
வாடியமருங்குல்பங்கன்வாழ்சிவபுரத்தில்வாழ்வார். (௬௪)

குடமுழாத்திமிலைமொந்தைகுணிலுடைநந்திதட்டை
படகமாகுளிமுன்னாரும்பலவகைவாச்சியங்க
ணடாவிச்சரணிராமநாதனுக்களிப்பாரன்றே
னிடமிகுமுலகிற்பன்னாளிருப்பர்பல்லியங்கலிப்ப.

புங்கவனிராமநாதன்பொருட்டகல்புவியினுள்ளோர்
தங்கையாற்றருவதொன்றுதானணுவளவிற்றேனு
மங்கஃதநந்தமாகுமவன்றிருமுன்வசிப்போ
ரிங்கினிமீளவாராரின்பவீடெய்துகிற்பார். (௬௬)

ஆயுளுங்கடிதுசெல்லுமகன்றிடுமிளமைமக்கள்
சேயிழைநிதிநாடெல்லாந்திண்டிறல்வேந்தர்கொள்வா
ரோயிஃதென்னையென்றுயாவையுந்துறந்திராம
நாயகன்றன்னைநெஞ்சினுடுவார்ஞானமிக்கோர். (௬௭)

இடுக்கணென்றிட்டவெல்லாமிரிந்திடுமிராமநாதன்
கடுக்களத்தெந்தையெம்மான்கண்ணுதல்சடியவேங்கை
யுடுக்கையான்சரணமேன்மையுணப்பதேயுயர்நெறிக்கண்
மடுக்குநூன்மரபினுய்ந்தமதிப்பயன்மாதவத்தீர். (௬௮)

மராமரமேழுமங்கோர்வாளியாற்றுளைத்தவள்ள
லிராமனுதாரத்தாலர்ச்சித்தேத்தியவிறைவற்கேற்ற
கிராமமீகுநர்தாம்யாக்கைக்கேட்டினிற்கேடிலாத
வராவணிவலயத்திண்டோனையனதுருவமாவார். (௬௯)

தங்குமித்தனையில்வானிற்றலைமைசால்பாத்திரத்துப்
பங்கயன்றலையாறசெய்தபாத்திரங்கையிலேந்து
மங்கணனிராமநாதனதிகபாத்திரமாமந்தச்
சங்கரற்குதவுமற்பதானபெரிதளப்பினறாகும். (௪0)

குடைகொடிவிசிறிசாமரந் தக்குலுக்கொடுக்குமன்ப
ரடையவிஞ்ஞாலமெல்லாமளித்திடுமரசராவர்
தொடைபுனைவதறகாம்வாசதருமலர்வழங்குவார்க்கு
நடையிருபுரவிமேதநன்மகப்பேறுண்டாகும். (௪௧)

சிட்டர்சூழிராமநாததெரிசனமேவர்க்கேனுங்
கிட்டுமேற்றீர்த்தம்வேதங்கிருதுமாதவங்கள்வேண்டாங்
கொட்டமான்மதநதுருக்கங்கொடுப்பவர்சுருதிவேலை
யெட்டருங்கரைகண்டாக்கமெண்ணிலவெய்துவாரே. (௪௨)

நரைவிடையூரிராமநாதனுக்கிலங்குசோதித்
தரளமாரலங்கலீவார்தாங்கனல்குரவிற்றூழா
ரரவமார்சங்கைநீராலவ்விலிங்கத்தையாட்டும
வரமுளார்தம்மைமுக்கண்வள்ளலும்வரிசைசெய்யும். (௪௩)

இந்தியம்பிறழுமுன்னேயிரங்குடறிரங்குமுன்னே
சிந்தனைதியங்குமுன்னேசிரோருகம்வெளுக்குமுன்னே
யந்தம்வந்தணுகுமுன்னேயருச்சனையிழைத்திறைஞ்சி
நந்தமர்குழையிராமநாதனைநண்ணலவேண்டும். (௪௪)

முன்புளசாத்திரங்கண்முறைறகெழுபுராணமெல்லா
மன்பினலிராமநாதனருணினைந்திறைஞ்சுவார்கள்
பின்பயில்கின்றதங்கள்பிறங்கடையும்பலோடு
மின்பமுறறிருப்பரும்பொய்துவர்முத்தியென்றும். (௪௫)

வேறு.

கற்காதையீதுபேசுநாவினார்கட்போடுகேள்வியூடுநாடுவார்
விற்கோடிமூழ்குபேறுமேவுவாமெய்த்தாணுவாமிராமநாதனார்
பொற்கால்கள்காணுவீரராகுவார்பொய்ச்சார்பிலாதஞானமாதவீ
றெற்கேழிராமநாதன்மேன்மைதானிப்போதுகூறினோமியாமரோ. (௪௬)

இராமநாதச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ௬௧௨.

## இராமனருச்சனைச்சருக்கம்.

பல்லாறுபடுஞ்சமயப்பொருள்பற்றிநின்றோ
ரெல்லார்களுமேத்தியிறைஞ்சுமிராமநாதன்
சொல்லார்புகழ்கூறியசூதனைமாதவத்தோர்
நில்லாதெழுநாரின்வினவிநிகழ்த்தலுற்றார். (௧)

நீயேமறைமெய்ப்பொருளுண்மைநிலைப்படுத்தோ
னீயேபலதொல்கதைவாரிதிநீந்தியிட்டோ
னீயேயுயிர்கட்கருள்கூர்ந்திடுநேயமிக்கோ
னீயேநினையொப்பவன்யாருனைநேருகிற்பார். (௨)

வேதத்துறைகண்டவியாதனற்பாதநண்ணிக்
கேதத்துறைநீக்குபுமேற்படுகேள்வியானே
சேதுத்துறைமேன்மைகணீயுரைசெய்தலாலே
போதத்துறைபெற்றனம்யாமிதுபோதுமாதோ. (௩)

முந்தப்படிவந்தவிராகவன்முக்கண்மூர்த்தி
சந்தப்படிவப்பிரதிட்டைதனைப்புரிந்தா
னெந்தப்படிமற்றதுகேட்டுணரிச்சைமிக்கே
மந்தப்படிசொற்றருளென்றனராயராஞோர். (௪)

அறிவாலுயர்சூதனுமப்பொழுதாரணத்தீர்
மறிவாரிதிசூழ்தருகந்தநன்மாதனப்பேர்
நெறியார்வரைமுன்னரிராகவனீடிலிங்கம்
பிறியாமைநிறுத்தமைபேசுவனென்றுபேசும். (௫)

முனையாடிறல்வேற்கையிராவணன்முன்புகாட்டின்
மனையாடனைவஞ்சமிழைத்தனன்வௌவியேக
நனையாடொடைராகவனண்புறுதம்பியோடுஞ்
சினையாடருமேலுறைவானரச்சேனையோடும். (௬)

கானேறுமிடத்தினைநீங்குபுகைவிலேந்தி
வானேறுமகேந்திரவெற்பினில்வந்ததன்மேற்
றானேறுபுசானகியென்பவடந்தமால்போன்
மீனேறுகடற்றிரைவீசிடுமேன்மைநோக்கி. (௭)

வேலைக்கரைநின்றுவினைக்கடலேற்றுநன்றன்
காலைப்புரைநீள்கரையொன்றதனூடுகட்டி
மாலைக்குழலைச்சிறைவைத்தவன்வாழிலங்கைச்
சோலைக்கடிஞாயின்மதிற்புறந்துன்னியங்கண். (௮)

புரைபாய்நிலவெண்மதியந்தியம்போதுவாவின்
விரைபாய்சுருட்சீதையைவிண்டமர்வெம்மையாற்றுன்
வரைபாய்பவனுமென்வேறினன்வானரத்தி
னிரைபாய்படையோடுசுவேலைநெடுஞ்சிலம்பின். (௯)

ஒப்போதருமாண்பினிராகவவுன்னைநீங்கா
வப்போதெனைவென்றிகொள்சானகியானனந்தா
னிப்போதெனையொத்ததுகாணுதியென்றுதிங்கண்
மைப்போதனையாளொடுசொல்லியவந்ததும்பர். (௧௦)

நிறைபட்டநிலாக்கதிரொங்குநிரம்புகாட்சி
யறைபட்டபயோததிதன்மகளாங்கரக்கர்
சிறையிட்டிடவாடியிருந்திடுசெய்தியெல்லா
முறையிட்டிடவந்ததுபோன்றதிராமன்முன்னம். (௧௧)

